9th August 1960]

**Sri N. K. PALANISAMI:** ஸார், இந்த குந்தா கழிவு நீரை கண்டிப்பாக பல்லடம், அவிநாசி தாலூகாக்களுக்குக் கொண்டு வருவதாக தாலூக்கா அரசியல் மாநாட்டில்—சூலூரில்—கனம் முதன் மந்திரி அவர்கள் முன்னிலையில் உறுதி சொல்லப்பட்டது. அதைப்பற்றி அந்த மாநாட்டில் தீர்மானமும் நிறைவேற்றப் பட்டிருக்கிறது. தண்ணீர் கீழ் பவானியில் போகவேண்டும், போதாது என்று சொன்னால், அக்டோபர் மாதத்திலாவது—தண்ணீர் அதிகமாக இருக்கும்போது—பல்லடம, அவிநாசி, ஈரோடின் வறண்ட பகுதி ஆகிய இடங்களிலுள்ள குளங்களை இந்தத் தண்ணீரைககொண்டு நிரப்பச் சர்க்கார் ஏதாவது பரிசீலனை செய்யுமா? அதைப்பற்றி சர்க்கார் ஏதாவது நடவடிக்கை எடுக்குமா?

**The Hon. Sri P. KAKKAN:** மாநாடு நடத்தி தீர்மானம் போட்டிருக்கலாம். அதற்கு அரசாங்கம் உடனே அங்கீகாரம் கொடுத்து விட்டதாக எடுத்துக்கொள்ளக் கூடாது. தண்ணீர் இருக்கும் போது இந்தத் திட்டமல்ல, எந்தத் திட்டத்தையும் சர்க்கார் கவனித்து வருகிறது. இப்போது இருக்கும் நிலையில் குந்தா கழிவு நீரைக் கொடுக்க வழியில்லை.

**Sri K. R. NALLASIVAM:** குந்தா மின் விசைத் திட்டப் பகுதி யிலிருந்து புதிய தண்ணீர் பவானி ஆற்றுக்குக் கிடைக்கிறதா என்று அறிய விரும்புகிறேன்?

பதில் இல்லை.

**Sri N. K. PALANISAMI:** குந்தாவிற்குப் பக்கத்தில் கோம்பை என்ற ஒரு ஆறு உற்பத்தியாகி மேற்கே போவது அமைச்சருக்குத் தெரியுமா? அப்படியானால் . . . .

**Mr. SPEAKER:** How is the question relevant? The hon. Member should know that the original question relates to the utilization of Kundah water for electricity and irrigation purposes. But the hon. Member is asking about some other project. How can I allow it?

**Sri N. K. PALANISAMI:** I am putting a separate question, Sir.

**Mr. SPEAKER:** The hon. Member should give notice of it.

*National Service by the students*

* 48 *Q.*—Sri A. A. RASHEED: Will the Hon. the Minister for Finance be pleased to state—

(*a*) whether the Government have received any recommendation from the Union Government that the students should be allowed to join Universities only after their completion of one year compulsory National Service; and

(*b*) if so, the action taken thereon?

THE HON. SRI C. SUBRAMANIAM: (*a*) Yes, Sir.

(*b*) The details of the scheme have not yet been finished by the Government of India.

SRI A. A. RASHEED: May I know, Sir, the nature of the national service the students are required to do.

THE HON. SRI C. SUBRAMANIAM: The scheme has not yet been finalised. I am unable to give the details.

**SRI M. KALYANASUNDARAM:** *நமது அரசாங்கத்தை அபிப் பிராயம் கேட்டார்களா? நமது அரசாங்கம் என்ன அபிப் பிராயம் தெரிவித்தார்கள்?*

**THE HON. SRI C. SUBRAMANIAM:** *அபிப்பிராயம் கேட்டிருக் கிறார்கள். இன்னும் தெரிவிக்கவில்லை.*

SRI A. A. RASHEED: May I know, Sir, whether this National service is compulsory for even girl students?

MR. SPEAKER: What is the point in the hon. Member asking this question when the hon. Minister has said that the scheme has not yet been finalised.

*Smallpox*

**49 Q.—SRI M. P. SARATHI:** *கனம் ரெவின்யு அமைச்சர் அவர்கள் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்கு பதிலளிப் பாரா—*

*(அ) சமீபத்தில் இந்த ராஜ்யத்தில் அம்மை வியாதி பரவ லாகக் கண்டிருந்ததா?*

*(ஆ) அதைக் கட்டுப்படுத்தவும், தடுக்கவும் மேற்கொண்ட நடவடிக்கைகள் என்ன?*

THE HON. SRI M. A. MANICKAVELU: *(அ)* There was no widespread prevalence of small-pox in the State. Only sporadic cases were reported.

*(ஆ)* Mass vaccination and re-vaccination drives, disinfection of the affected premises and materials, and isolation of cases in the Infectious Diseases Hospitals or sheds or Home segregation wherever feasible have been carried out. Health Education of the public in regard to the mode and spread of small-pox and the preventive measures to be taken have also been done in the affected areas.

**SRI S. M. ANNAMALAI:** *ஸார், மலேரியா போன்ற வியாதி களை முழுதும் ஒழிக்க சர்க்காரிடத்தில் திட்டம் இருக்கிறது. அதே போன்று வைசூரியை ஒழிக்க சர்க்காரிடத்தில் திட்டம் இருக்கிறதா? அப்படியானால் அதன் விவரம் என்ன?*

**THE HON. SRI M. A. MANICKAVELU:** *நல்ல திட்டம் இருக்கிறது. சில வருஷங்களிலே வைசூரியை நம் நாட்டிலேயே*